# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 8 | இதழ் 9 | ஏப்ரல் 10, 2022 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 8 | Issue 9 | April 10th, 2022 | Annual Subscription Rs. 100/-

ஞானியரை வணங்குவது மட்டும் சிறப்பல்ல!

நீங்களே ஞானியாக மலர்வதுதான் சிறப்பு!!

சென்னையில்

ஸ்ரீ பகவத் ஐயாவின்

## 2 நாள் ஞான முகாம்



- இரண்டாயிரம் வருடங்களுக்குப் பிறகு இயற்கை வழங்கிய கொடை
- புத்தருக்குப் பிறகு ஆன்மிக உலகில் புரட்சியை ஏற்படுத்தி வருகிறார்
- தேடுதல் உள்ளவர்கள் 2 நாட்களில் ஞானம் பெறுவது உறுதி
- எல்லா வகையான மனப்பிரச்சினைகளில் (Work related stress, Anxiety, Depression, Stage Fear, Anger) இருந்து விடுபட்டு வாழ்வில் வெற்றி பெறுவதற்கான வழிமுறை

Date : 23th & 24th April 2022

Time : 9.30am to 7.30pm

Venue : ASHA NIVAS SOCIAL SERVICE CENTRE (A/c Hall) Nungambakkam, Chennai - 600006.



முன் பதிவுக்கு : 79041 18421, 98843 48800 99942 05880, 97891 65555

# பகவத் பாதை தமிழ் மாத இதழ்

“

நமது மனதின் செயல்பாடு எவ்வாறு செயல்படுகிறது என்பதை முழுமையாக அறிந்து கொள்வதுதான் உண்மையான ஞானம்.

அந்த ஞானம் நமது மனதையும் நமது செயலோடு இணைத்துக் கொண்டு செயல்படுவதால் நமது செயல்கள் அனைத்துமே பொலிவு பெற்று விடுகின்றன.



ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

வருகின்ற ஏப்ரல் மாதம் 20ஆம் தேதி பெங்களூரில் இரவு 8.30 pm க்கு **ஸ்ரீ பகவத் அய்யா** அவர்களுடன் **ஒரு சத்சங்கம்** ஏற்பாடு செய்துள்ளோம்.

| | | |
|---|---|---|
| இடம் | : | **East Cultural Association**<br>8, 100 Feet Road, Indiranagar,<br>Bengaluru, Karnaataka -560095 |
| நாள் | : | **20-04-2022** |
| நேரம் | : | **8:30pm - 9:30pm** |

இதில் பெங்களூரைச் சேர்ந்த நமது அன்பர்கள் கலந்து கொண்டு பயன் பெற அழைக்கிறோம்.

இத்தகவலை பெங்களூரை சேர்ந்த உங்கள் நண்பர்களுக்கும் தெரிவிக்க வேண்டுகிறோம்.

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன்**

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

வருகின்ற மே மாதம் 1-ஆம் தேதி திருச்செங்கோடு – நாமக்கல் ரோட்டில் அமைந்துள்ள நாடார் திருமண மண்டபத்தில் மாலை 5.30 மணிமுதல் இரவு 8.30 PM மணி வரை ஸ்ரீ பகவத் அய்யா அவர்களுடன் ஒரு சத்சங்கம் ஏற்பாடு செய்துள்ளோம்.

| | | |
|---|---|---|
| நாள் | : | **01-05-2022** |
| நேரம் | : | **5.30 pm - 8.30 pm** |
| இடம் | : | **நாடார் திருமண மண்டபம்,**<br>திருச்செங்கோடு – நாமக்கல்<br>ரோட்டில், திருச்செங்கோடு |

இதில் அனைவரும் கலந்து கொண்டு பயன் பெற அழைக்கிறோம்.

இத்தகவலை உங்கள் நண்பர்களுக்கும் தெரிவிக்க வேண்டுகிறோம்.

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன்.**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# ஞானக் குடுவை



- ஸ்ரீ பகவத்

அண்மைக்காலத்தில் மாணவ - மாணவியர்களுக்கு மட்டும் என விசேடமான ஞான முகாம் ஒன்றை நடத்தினோம். 9 முதல் 12 ஆம் வகுப்புகளில் படிப்பவர்கள் மட்டும் கலந்து கொண்டார்கள்.

வாழ்க்கையில் அவர்களுடைய எதிர்பார்ப்புகள் எவ்வாறு உள்ளன என்பதை அறிய விரும்பினோம். அவர்களில் பலர் எழுந்து பேசத் தயக்கம் காட்டினார்கள். அதனால் அதனை பேப்பரில் எழுதிக் கொடுக்கச் சொல்லி எழுதி வாங்கினோம்.

"என்ன படிப்பு படித்தால் என்ன வேலை கிடைக்கும்" - என்ற ரீதியாகவே எழுதிக் கொடுத்திருந்தார்கள்.

பால் மணம் மாறாத - கள்ளங்கபடமற்ற தோற்றத்தில் இருந்த அவர்கள்,

அவர்களது தலையில் ஒரு பெரிய பாராங்கல்லைச் சுமந்து கொண்டிருக்கிறார்களோ என்று எண்ணத் தோன்றியது.

ஒரு குருநாதரிடம் நாலைந்து சீடர்கள் தங்கியிருந்து ஞானப் பாடங்களைக் கற்று வந்தனர்.

அவர்களில் முதலில் வந்த ஒரு சீடன் தனது பாடங்களைக் கற்று முடித்து விட்டான். இனி அவன் தனது சொந்த வீட்டுக்குத் திரும்ப வேண்டியது தான்.

மறுநாள் காலை அந்த சீடன் குருநாதரை வணங்கி விடைபெற்றான்.

குருநாதரும் அவனை ஆசீர்வதித்து ,

" நீ என்ன செய்யப் போகிறாய்? உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

"நான் மீண்டும் எனது அப்பா அம்மா மற்றும் சகோதரர்களுடன் சேர்ந்து கொண்டு தொடர்ந்து எனது விவசாயத்தைக் கவனிப்பேன். எனது உறவுப் பெண்ணும் தயாராக இருக்கிறாள். அவளைத் திருமணம் செய்து கொண்டு குடும்பம் நடத்துவேன். எனக்கு வேண்டிய பொருளாதார வசதிகளுக்கும் அருளாசி வழங்க வேண்டுகிறேன்,"

என்று கூறி, அவன் குருநாதரைப் பணிந்தான்.

குருநாதரும் அவன் கையில் ஒரு மண்வெட்டியைக் கொடுத்து, "இங்கிருந்து வடக்கு திசையை நோக்கிப் போ. அங்கே ஒரு ஆலமரம் வரும். அந்த ஆலமரத்துக்கு வடகிழக்கு மூலையில் பத்தடி தூரத்தில் தோண்டிப்பார். உனக்கு வேண்டிய திரவியம் கிடைக்கும். மேலும் தேவைப்பட்டால் மேலும் பத்தடி தூரத்தில் இன்னொரு முறை தோண்டிப்பார். அங்கேயும் உனக்கு ஏதாவது கிடைக்கும். அதுவும் போதாது என்றால் இன்னும் ஒரு பத்தடி தள்ளி தோண்டிப்பார்", என்று கூறி, ஆசீர்வதித்து அனுப்பினார்.

அவனும் மண்வெட்டியுடன் புறப்பட்டு முதலாவது குழியைத் தோண்டினான். ஒரு சிறிய மண் குடுவை நிறைய தங்கக் காசுகள் கிடைத்தன.

ஆவல் மேம்பட்டதால் அடுத்த குழியையும் தோண்டினான். அங்கும் ஒரு சிறிய மண் குடுவை கிடைத்தது. அதனுள் விலைமதிப்பற்ற வைரக்கற்கள் இருந்தன.

இதையும் விட உயர்ந்ததாக அப்படி என்ன கிடைத்துவிட முடியும் என்று எண்ணியவாறே மூன்றாவது குழியையும் தோண்டினான்.

அங்கும் அவனுக்கு ஒரு சிறிய மண் குடுவை கிடைத்தது. அதன் வாய் ஒரு தாமிரத் தகட்டினால் மூடப்பட்டிருந்தது.

அவனும் லாவகமாக அதனைப் பிரித்துப் பார்த்தான்.

உள்ளே எதுவும் இல்லாமல் அது வெறும் வெற்றுக் குடுவையாக இருந்தது.

அதனைப் பார்த்த அவன் அப்படியே அசைவற்று உட்கார்ந்து விட்டான்.

மூன்று குடுவைகளும் அவனைப் பார்த்து நகைத்துக் கொண்டிருந்தன. தங்கத்தாலும், வைரத்தாலும் எந்த நன்மையும் கிடையாது; வெட்ட வெளியான ஞானமே முக்கியமானது என்பதை அவன் நன்றாகவே புரிந்து கொண்டான். அந்த மூன்று குடுவைகளையும் அதனதன் இடத்தில் அப்படியே வைத்து மீண்டும் மூடி விட்டான்.

வெறுங்கையுடன் திரும்பிய அவனை, என்னவென்று கேட்டு குருநாதர் விசாரித்தார்.

சீடன் நடந்த விவரங்களை எல்லாம் பணிவுடன் எடுத்துக்கூறி, குருநாதரை வணங்கினான்.

குருநாதரும் அவனை ஆசீர்வதித்துவிட்டு, அந்த மூன்று குடுவைகளையும் மீண்டும் அங்கே எடுத்து வரச் சொல்லி, கட்டளையிட்டார்.

அதன்படியே அவனும் அந்த மூன்று குடுவைகளையும் மீண்டும் தோண்டி எடுத்து அங்கே கொண்டு வந்து, குருநாதர் முன்னிலையில் வைத்தான்.

இப்போது குருநாதர் அவனிடம் கூறினார்:

"அப்பா, நீ எதைப் புரிந்து கொள்ள வேண்டுமோ அதனைப் புரிந்து கொண்டு விட்டாய்...

"தங்கத்தை விடவும் வைரத்தை விடவும் வெட்டவெளி ஞானம்தான் உயர்ந்தது என்பதை நீ நன்றாகவே புரிந்து கொண்டு விட்டாய்....

"ஆனால் அந்த வெட்டவெளி ஞானம் என்பது, தங்கத்துக்கும் வைரத்துக்கும் அந்நியமானது அல்ல. அது அந்த தங்கத்தையும் வைரத்தையுமே உள்ளடக்கிய ஒரு பிரம்மாண்டமே ஆகும்...

"தங்கத்துக்கும் வைரத்துக்கும் வேண்டுமானால் அந்த வெட்டவெளி ஞானம், அந்நியமான ஒன்றாக இருக்கலாம். ஆனால் அந்த வெட்டவெளி ஞானத்தைப் பொறுத்த அளவில், அவற்றுக்கு எவையுமே அந்நியமானது அல்ல. தங்கமும் வைரமும் கூட விதிவிலக்கு அல்ல...

"வெட்டவெளி ஞானத்தை அடைந்த நீ, அந்தத் தங்கத்தையும் வைரத்தையும் விட உயர்ந்தவனே. அவை அனைத்தும் உனக்கு கட்டுப்பட்டவையே. அவை யாவும் உனக்கு அடிமை சேவகம் செய்வதற்காகவே ஏற்பட்டவை. இந்த மூன்று குடுவைகளையும் எடுத்துச்சென்று சந்தோசமாக வாழ்க்கையை நடத்து...

"உனது குடும்பமும், மனைவி மக்களும், தொழில்களும் உனது ஞானத்தெளிவுக்கு விரோதமானவை அல்ல. அவை அனைத்தும் உனது ஞானத்துக்கு உதவியாகவே உள்ளன. உனது ஞானமும் கூட அவைகளுக்கு உதவியான ஒன்றுதான்."

பள்ளிக் குழந்தைகள் பாறைகளைச் சுமப்பதும் தவறு; பாண்டித்தியம் பெற்றவர்கள் உலகப் பொறுப்புகளைத் துறப்பதும் தவறு.

பள்ளிக் குழந்தைகள் பாரங்களைச் சுமக்கும் போக்கு இப்போதுதான் புதிதாக அறிமுகம் ஆகியுள்ளது.

ஆனால் ஞானத்துக்காக உலகத்தையும் உலகியல் பொறுப்புகளையும் துறந்துவிடும் அணுகுமுறை, காலம் காலமாக நம்மிடையே இருந்து வருகிறது.

அரசாட்சியைத் துறந்த புத்தர்தான் ஞானி ஆனார். ஞானத்தைத் தேடி அவர் இந்தத் துறவை மேற்கொண்டிருந்தார்.

அவர் கண்டுபிடித்த ஞானம் மிகவும் அசாதாரணமானது. அதுவரை எவருமே கண்டுபிடிக்காத கோணத்தில் அவர் அன்று அதனைக் கண்டுபிடித்திருந்தார்.

இன்றளவும் அவரது ஞானம் மிகவும் உயர்ந்த இடத்தையே பிடித்துள்ளது. உலக ஜனத்தொகையில் பெரும்பாலானோர் புத்த மதத்தைச் சார்ந்தவர்கள் என்பது நடைமுறை உண்மை. அந்த அளவு அவரது கண்டுபிடிப்பு உன்னதமானதாகவும் அசாதாரணமானதாகவும் அமைந்திருந்தது.

அதுவரை உள்ள அணுகுமுறைகள் அனைத்தையும் அவர் புரட்டிப்போட்டுவிட்டு புதியதொரு அணுகுமுறையை அன்று அவர் கண்டுபிடித்திருந்தார்.

ஆனால் அவருங்கூட, சந்நியாச பாரம்பரியத்தை அங்கீகரிக்கும் வகையில் தனது சீடர்கள் அனைவரையும் துறவிகளாக்கினார்.

ஏன், தனது சொந்த மகனையே துறவியாக்கி விட்டார்.

அவரது ஞானக் கண்டுபிடிப்பு புதுமையானது; புரட்சிகரமானது. ஆனால் அவருடைய வாழ்க்கை போதனையானது துறவறத்தை மட்டுமே மையமாகக்கொண்டு அமைந்துவிட்டது. அந்தப் பாரம்பரியத்துக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுப்பதாக அமைந்து விட்டது. அதனால் அவருடைய புரட்சியானது அரைகுறைப் புரட்சியாக மட்டுமே அமைந்துவிட்டது.

உலக வாழ்க்கை என்பது ஞானத்துக்குப் புறம்பானதா ?

ஞானம் அடைந்த ஒருவர், உலகியல் கடமைகளைத் துறந்துவிட வேண்டுமா ?

இரமண மகரிஷியிடம் கேட்டார்கள்: ”உங்களது ஞானம் துறவிகளுக்கு மட்டும்தான் பொருந்துமா? இல்லறத்தார்களுக்குப் பொருந்தாதா? மனைவி மக்களோடு வாழ்ந்து வருபவர்களுக்குப் பொருந்தாதா ?”

அதற்கு அவர் எந்தத் தயக்கமும் இல்லாமல் பதில் கொடுத்தார்:

”எவர் வேண்டுமானாலும் ஞானம் அடையலாம்.

குடும்பப் பொறுப்புகளில் இருப்பவர்களும் அங்கு இருந்தவாறே ஞானத்தை அடையலாம்.”

கேள்வி கேட்டவரும் விடாமல் துரத்தினார்: ”அப்படியானால் நீங்களும் ஒரு திருமணம் பண்ணிக் கொள்ளலாம் அல்லவா ? ”

ஆனால் இந்தக் கேள்விக்கு மட்டும் இரமணர் பதிலளிக்காமல் மௌனமாகிவிட்டார்.

நமது அன்றாட நடைமுறை வாழ்க்கையில் இணைந்த ஒன்றுதான் உண்மையான ஞானம்.

உண்மையான ஞானம் உலகத்தை விட்டு உங்களை எங்கேயும் கூட்டி செல்லாது. அப்படிக் கூட்டிச் சென்று விட்டால், அது ஞானமே அல்ல.

உங்கள் மனதின் செயல்பாட்டை எவ்வாறு நிர்வாகம் செய்வது

என்பதை முழுமையாக அறிந்து கொள்வது தான் உண்மையான ஞானம்.

அந்த ஞானம் நமது மனதையும் நமது செயல்களோடு இணைத்துக் கொண்டு செயல் புரிவதால்,

நமது செயல்கள் அனைத்துமே பொலிவுற்று விடுகின்றன.

இதனால் எங்கும் நலமும் வளமுமே ஏற்பட்டுவிடுகின்றன.

ஆன்மிகம் என்ற பெயரில் ஞானத்தை எட்டாக்கனியாக மாற்றிவிட்டிருந்திருக்கின்றனர்.

உலகியலுக்கும் ஞானத்துக்கும் சம்பந்தமே இல்லை எனக் கூறிவிட்டனர்.

இதனால், உண்மையில் அவர்கள் ஞானத்தையே புறக்கணித்து இருந்திருக்கின்றனர்.

நம்முடைய அன்றாட வாழ்வில் ஞானத்தை இணைத்துக் கொள்ள வேண்டுவது,

நம் ஒவ்வொருவருடைய கடமையும் ஆகும்.

இது வெறும் வரட்டு ஆன்மிகம் அல்ல. இது நடைமுறை உண்மை. நடைமுறை வேதாந்தம். நடைமுறை சித்தாந்தம்.






V.A.P. சரவணன்
செல் : 99942 05880

# கேள்வி பதில்...

## 'நான்' என்ற எண்ணத்தை கைவிடுவது எப்படி?

**கேள்வி :** வாழ்க்கை முழுவதும் பிரச்சினைகள் ஒன்று போனால் மற்றொன்று என தொடர்ந்து வந்து கொண்டே தான் இருக்கிறது. பிரச்சினைகளுக்கெல்லாம் மூல காரணம் நான் என்ற அகங்காரம்தான் என்பது தெளிவாக தெரிகிறது. ஆனால் 'நான்' என்ற எண்ணத்தை கைவிடுவது எப்படி என்று தெரியவில்லை. நான் நடைமுறை வாழ்க்கையில், வழக்கமாகவே "எனக்கு", "நான்" என்ற வார்த்தைகளை உபயோகிப்பதை நிறுத்தி விட்டேன்.

எனக்கு கோபம் வந்தால் –'அதற்கு கோபம் வந்துவிட்டது' என்றும், எனக்கு வருத்தம் ஏற்பட்டால் – 'அதற்கு வருத்தம் ஏற்பட்டு விட்டது' என்றும், எனக்கு ஒரு விருப்பம் இருந்தால் – 'அதற்கு ஒரு விருப்பம் இருக்கிறது' என்றும், எனக்கு ஏதாவது தேவைப்பட்டால் – 'அதற்கு தேவைப்படுகிறது' என்றும் கூறி பழகிக்கொண்டேன்.

ஆனால் என்ன முயற்சி செய்தாலும் நான் என்ற உணர்வை மனதில் இருந்து நீக்கவே முடியவில்லை.

ஆன்மிகத்தில் **"தன்னை இழந்த நலமே பூரணம் என்று கூறுகிறார்கள்."** – இது சாத்தியமா? எவ்வாறு?

**பதில்:** நமக்கு ஏற்படும் அத்தனை மனப் பிரச்சினைகளுக்கும், நம் அகத்தை நிர்வகிக்க முயற்சி செய்யும் "நான்" என்ற தன்மையே மூலக்காரணம்.

நமது நான் என்ற தன்மை அகத்தளவில் தன்னை இழக்காமல் இருப்பதே நாம் சந்திக்கும் எல்லாப் பிரச்சினைகளுக்கும் அடிப்படைக் காரணம்.

நம்முடைய நான் தன்மை எதிர்கொள்ளும் பிரச்சினைகளை இருவகையாக பிரிக்கலாம்.

நமக்கு புறத்திலும் பிரச்சினை ஏற்படுகிறது. புறத்தில் ஏற்படும் பிரச்சினையால் அகத்திலும் பாதிப்புகள் ஏற்படுகின்றன.

புறப் பிரச்சினைகள் என்பது, குடும்ப உறவுகளில், தொழிலில், சமுதாயத்தில் என ஏற்படுகின்ற பிரச்சனைகளை குறிப்பிடுகிறோம்.

அகப் பிரச்சினைகள் என்பது நமது மனதில் ஏற்படுகின்ற பயம், கவலை, கோபம், வருத்தம், வேதனை போன்றவற்றை குறிப்பிடுகிறோம்.

புறத்தில் ஏற்படுவது செயல் ரீதியான பிரச்சினைகள். இதன் காரணமாக அகத்தில் ஏற்படுவது எண்ண ரீதியான, உணர்வு ரீதியான, பிரச்சினைகள். நமது நான் தன்மை இங்கு இரண்டு பிரச்சினைகளையும் எதிர்கொள்ள வேண்டியுள்ளது.

புறம் சம்பந்தமான – செயல் ரீதியான பிரச்சினைகளில் தீர்வு காண்பதற்கு, தீர்வு சம்பந்தமாக சிந்திப்பதும் செயல்படுவதும் நான் தன்மையின் கடமையாகும்.

அதே நேரம் இந்த புறப்பிரச்சினையால் ஏற்பட்ட வேதனை, மன வருத்தம், கோபம், பயம், கவலை போன்றவைகள் அகப் பிரச்சினைகள். அகப் பிரச்சினைகள் என்பது இந்த நான் தன்மைக்கு கட்டப்பட்டதல்ல. நான் தன்மையின் கட்டுப்பாட்டில் இல்லாத அகப்பிரச்சனையை தீர்க்க வேண்டிய கடமை நமது நான் தன்மைக்கு எதுவும் கிடையாது.

நமது நான் தன்மைக்கு அகத்தில் எந்த வேலையும் இல்லை என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

ஆனால் அகத்தில் தன்னுடைய கட்டுப்பாட்டுக்குக் கீழ் தான் எண்ணங்களும் உணர்வுகளும் செயல்பட வேண்டும் என்று தனது ஆட்சியை, பிடிவாதத்தை நமது நான் என்ற தன்மை பிடித்துக் கொண்டிருக்கிறது.

நமக்கு ஏற்படும் எண்ணங்களும் உணர்வுகளும் நமது நான் தன்மைக்கு கட்டுப்பட்டது கிடையாது என்ற உண்மையைப் புரிந்து கொள்ளாமல் மன நெருக்கடியை தொடர்ந்து ஏற்படுத்துகிறது.

இப்படி நமது நான் தன்மை சதா மன இயக்கத்தோடு தொடர்ந்து முடிவில்லா போராட்டத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறது. இதைத்தான் நாம் அகப் போராட்டம் என்று குறிப்பிடுகிறோம்.

நமக்கு புறப்பிரச்சினையால் அகப் பிரச்சினைகள் தோன்றலாம்.

சில நேரங்களில் புறப் பிரச்சினை எதுவும் இல்லாமல் கூட அகத்தில் தேவையற்ற பயமும், கவலையும், கோபமும் கூடத்தோன்றலாம்.

**அகப் பிரச்சினைகள் எப்படித் தோன்றினாலும் அவை நான் தன்மைக்கு கட்டப்பட்டதல்ல. அவற்றை நிர்வகிக்கும் எந்தப் பொறுப்பும் நான் தன்மைக்கு கிடையாது.**

**உ**தாரணமாக, சலனமற்ற ஒரு குளத்தில் வெளியில் இருந்து ஒருவர் கல் எறிவதன் மூலம் குளத்தில் அலைகள் தோன்றலாம். சில நேரங்களில் குளத்தின் அடி ஆழத்திலிருந்து நீர்க்குமிழிகள் வெளிபடுவதன் மூலமும் குளத்தின் மேற்பரப்பில் அலைகள் தோன்றலாம்.

அந்த குளத்தில் ஏற்பட்ட அலை எப்படி தோன்றினாலும் நாம் முயற்சி செய்து தண்ணீரில் ஏற்பட்ட அலையை நீக்க வேண்டிய அவசியமில்லை. நாம் முயற்சி செய்து அலையை நீக்கவும் முடியாது. நமது முயற்சி ஏதும் இல்லாமலேயே அலை தாமாகவே சமன் பட்டுவிடும்.

இது போல நம்முடைய அகப்பிரச்சினைகளுக்கு காரணம் எதுவாக இருந்தாலுமே நமது நான் தன்மைக்கு அங்கு எந்த முயற்சியுமே தேவையில்லை.

நமது அகத்தை பொருத்தவரை நமது நான் தன்மையின் முயற்சிதான் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் காரணம். இங்கு நமது நான் தன்மை தனது இயலாமையைப் புரிந்து கொண்டு தனது முக்கியத்துவத்தை இழக்க வேண்டும்.

அகத்தில் நமது நான் தன்மைக்கும் எண்ண உணர்வுகளுக்கும் இடையில் ஏற்படும் போராட்டமே அகத்தை இரண்டாக்கி விடுகிறது.

**நான் தன்மை தன் இயலாமையை புரிந்து கொண்டு தனது முயற்சியைக் கைவிடும் போது, தனது முக்கியத்துவத்தை இழக்கும்போது, அகம் முழுமை ஆகிவிடுகிறது–பூரணமாகிவிடுகிறது.**

**இதைத்தான் தன்னை இழந்த நிலையில் தானே பூரணமாக மாறிவிடுகிறது என்று சொல்லுகிறோம்.**

இதுவே தன்னை இழந்த நலம்.

மேலும் ஓர் உதாரணத்தின் மூலம் எளிமையாக புரிந்து கொள்வோம்.

ஒரு மாமரம் கம்பீரமாக பூமிக்கு மேலே இருபது அடி வளர்ந்து, விரிந்து பெரிய குடையைப் போல நிற்கிறது. பூமிக்கு கீழே அந்த மரத்தின் வேர் பகுதி நாற்பது அடியாக பரவி நீண்டு இருக்கும்.

பூமிக்குக் மேல் இருக்கும் மரத்தின் அளவைப் போல இரண்டு மடங்கு பூமிக்கு அடியில் அந்த மரத்தின் வேர்ப்பகுதி விரிந்த நிலையில் இருக்கும்.

இரண்டு மடங்கு நீளம் கொண்ட வேர்ப்பகுதியின் பிடிப்பால் மட்டுமே பூமிக்கு மேல் உள்ள மரம் கம்பீரமாக நிற்க முடியும்.

பூமிக்கு கீழே இருக்கக்கூடிய பல்வேறு சக்திகளை வேர்களின் மூலம் உறிஞ்சித்தான் பூமிக்கு மேலே பெரிய மாமரமாகவும், அதன் கிளைகளாகவும் இலைகளாகவும் பூக்களாகவும் காய்களாகவும் கனிகளாகவும் தொடர்ந்து மாற்றமடையச் செய்கிறது.

இந்த வேர்ப்பகுதி ஒருபோதும் நமது கண்களுக்கு தெரிவதில்லை என்றாலும் இந்த வேர்ப்பகுதியின் ஆதாரத்தில் மட்டுமே இந்த மரம் நமது கண்களுக்கு காட்சி கொடுத்துக் கொண்டிருக்கிறது.

இந்த மரத்தை முற்றிலுமாக நாம் அழித்து விட வேண்டும் எனில் பூமிக்கு மேலே இருக்கும் மரத்தின் தண்டுப்பகுதியை கிளைகளை என மரத்தின் எந்த பகுதியை வெட்டிச் சாய்த்தாலும் அது மீண்டும் முன்பை விட வேகமாக துளிர்த்து தழைத்து வந்து விடும்.

மரத்தை முழுமையாக அழிப்பதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?

பூமிக்கு மேல் உள்ள மரப் பகுதியை வெட்டி

ஒரு பிரயோஜனமும் இல்லை என்பதை நாம் நன்றாக புரிந்து கொண்டோம். வேறு என்னதான் செய்ய வேண்டும்?

மரத்தை முழுமையாக அழிப்பதற்கு நாம் அதிக சிரமப்பட வேண்டிய அவசியம் ஒன்றும் இல்லை. மரத்தின் ஆணிவேர் எது என்று கண்டுபிடித்து அதை முழுவதுமாக துண்டித்து விட்டால் போதும். மரத்திற்கும் வேருக்கும் இருக்கும் இணைப்பு முழுமையாக துண்டிக்கப்பட்டு விடும்.

வேரிலிருந்து கிடைக்கும் சக்திகள் மரத்திற்கு கிடைக்காமல் நின்று போய்விடும். வேர் துண்டிக்கப்பட்ட பிறகு மரத்தின் இறப்பு தொடங்கிவிடுகிறது. அதிகபட்சம் ஒரு வாரத்திற்குள்ளாக மரம் முழுமையாக இறந்து போய் சாய்ந்து விடும்.

உதாரணத்தை முதலில் நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள்.

பூமிக்கு மேலே தெரியும் மரம்தான் நாம் சந்திக்கக்கூடிய ஒட்டு மொத்த பிரச்சினைகள் ஆகும்.

பூமிக்கு அடியில் இருக்கும் ஆணி வேர்தான் நமது நான் என்ற தன்மையாகும்.

**நமது பிரச்சினைகள் தொடர்ந்து உயிர்வாழ்ந்து கொண்டிருப்பதற்கு காரணமே மரத்தின் ஆணி வேர்ப்பகுதியான நமது நான் தன்மையின் அகமுயற்சியே காரணம் ஆகும்.**

**நாம் சந்திக்கும் பிரச்சனைகளான மரம் மடிய வேண்டும் எனில் அதன் ஆணிவேர்ப் பகுதியான நான் தன்மையின் இணைப்பு துண்டிக்கப்பட வேண்டும்.**

நமது பிரச்சனைகளை தாங்கி பிடித்துக் கொண்டிருக்கும் நான் தன்மையை துண்டிப்பது என்பது என்ன?

நான் தன்மையான ஆணி வேர்ப்பகுதியை துண்டிப்பது என்பது தன்னுடைய இயலாமையை தானே (நான் என்ற தன்மை) உணர்ந்துகொண்டு, தனது பிடிவாதத்தில் இருந்து விடுபடுவதன் மூலம் நமது நான் தன்மை பிரச்சனையிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வது (துண்டிப்பது) ஆகும்.

**நான் என்ற தன்மை துண்டிக்கப்பட்ட நிலையில் அனைத்து பிரச்சனைகளும் தானாகவே வலுவிழந்து போய் விடும்.**

**தன்னுடைய இயலாமையை உணர்ந்து கொண்ட நான் தன்மை அகத்தளவில் செய்வதற்கு எதுவும் இல்லை என்ற சும்மா இருக்கும் மன நிலைக்கு மாறிவிடுகிறது.**

மேற்சொன்ன நிலையில் நமது நான் தன்மை இருக்கிற பொழுது எல்லா எண்ணங்களும் உணர்வுகளும் சுதந்திரமாக தோன்றி மறைகிறது. ஓடுகின்ற ஓர் ஆற்றின் தன்மைக்கு பிரவாகமாக மாறிவிடுகிறது.

நான் என்ற தன்மை தன்னுடைய இயலாமையைப் புரிந்து கொள்வதை ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

அப்படி புரிந்து கொண்ட நிலையில் மனதின் இயக்கம் விடுதலையுடன் சுதந்திரமாக செயல்படுகிறது. இதைத்தான் விடுதலை என்று குறிப்பிடுகிறோம்.

இப்படி நமது நான் என்ற தன்மை தனது இயலாமையை உணர்ந்து கொண்ட நிலையில் மனதின் இயற்கையான இயக்கத்தின் ஓர் அங்கமாகவே மாறிவிடுகிறது.

இப்படி நமது நான் தன்மையை விளங்கிக் கொள்ளும் பொழுது அகத்தில் வரும் எண்ணங்களும் உணர்வுகளும் தாமாகவே தோன்றி தாமாகவே மறையக் கூடிய நிலைக்கு மாறிவிடுகிறது. நமது நான் தன்மை அக இயக்கத்தில் எந்த விதமான குறுக்கீடுகளையும், தேவையற்ற போராட்டங்களையும் செய்வதில்லை. இதுவே அக விடுதலை.

இப்படி புரிந்து கொண்ட ”நான்” அகத்தை அது எப்படி உள்ளதோ அதை மாற்ற முயலாமல் அதை அப்படியே ஏற்றுக்கொள்கிறது. இது தான் அகத் துறவு ஆகும். புறத்திலும் மற்றவர்களை மாற்ற முயற்சிப்பதிலிருந்து முற்றிலுமாக விடுபட்டு அவர்கள் சுதந்திரமாக செயல்பட இடமளிக்கிறது.

நம்மிடம் ஒருவர் சுதந்திரமாக செயல்பட இடம் அளிப்பது என்பது தான் நாம் அவர்கள் மீது செலுத்தும் உண்மையான அன்பு ஆகும்.

அகத்தில் துறவு – புறத்தில் அன்பு இதுவே முழுமையான வாழ்வு, நிறைவான வாழ்வு.

இது முயற்சியால் வருவதல்ல, முயற்சியை கைவிட்டு சும்மா இருப்பதால் வருவது.



K.S. ஜீவமணி
செல் : 97891 65555



# ஆசிரியர் பகுதி

ஞானியர் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

"நமது வாழ்வின் நோக்கம் என்ன?" "எதை அடைவதற்கு வாழ்ந்து கொண்டிருக்கிறோம்?"

"எதற்கு இந்த பிறப்பு?"

- இந்தக் கேள்விகள் அனைத்தும் எப்போது தோன்றும்?

மகிழ்ச்சியான மனநிலையில் எவருக்கும் இந்த கேள்விகள் தோன்றாது.

துன்பமான மனநிலையிலும் விரக்தியிலுமே தோன்றும் கேள்விகள் இவை.

மகிழ்ச்சியை எவரும் வெறுப்பதில்லை. மகிழ்ச்சியை எவரும் மாற்ற நினைப்பதில்லை. மகிழ்ச்சியில் அனைவரும் மயங்கியே இருக்கிறார்கள்.

மகிழ்ச்சியை அனைவரும் வரவேற்கிறார்கள்.

இதுபோல் துன்பமான மனநிலையை எவராவது வரவேற்பார்களா?

வந்தத் துன்பத்தை ஏற்றுக் கொள்வார்களா?

துன்பத்தை மாற்றவே முயல்வார்கள். துன்பத்தோடு முறண்படவே செய்வார்கள்.

அகநிலையை பொறுத்தவரை துன்பத்தையும் இன்பத்தின் நிலைக்கு உயர்த்த முடியுமா?

துன்பத்தையும் இன்பத்தின் தகுதிக்கு உயர்த்த முடியுமா?

அதற்கு என்ன செய்ய வேண்டும்?

அகத்தளவில் துன்பத்தையும் இன்பத்தையும் ஒரே தகுதியில் வைத்திருப்பவர்களை தாம் ஞானிகள் என்கிறோம்.

இது எவருக்கு சாத்தியம்?

அடைவதற்கு மிகவும் அரிதாக இருந்த ஞானம், ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அணுகுமுறையில் மிகவும் எளிமையாக்கப் பட்டுவிட்டது.

இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பு புத்தர் வாழ்ந்த காலத்தில் அவரால் ஞானமடைந்தவர்கள் பலர். அதன் பிறகு இயற்கை வழங்கிய கொடை ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

புத்தருக்குப் பிறகு ஆன்மிக உலகில் புரட்சியை ஏற்படுத்தி வரும் ஸ்ரீ பகவத் அய்யாவின் அணுகுமுறையில் ஞானத் தேடுதல் உள்ளவர்கள் அனைவரும் ஞானம் பெறும் தகுதிக்கு வந்து விடுகிறார்கள்.

மேலும் அக்காலத்து ஞானம் உலக வாழ்வைத் துறக்க வைத்தது. ஆனால் இவரது ஞானம் உலகியல் உயர்வுகளையும் இணைத்தே வழங்குகிறது.

பெரிய தொழில் அதிபர்களையும் புத்தனாக்க வல்லது - புத்தனையும் தொழிலதிபர்களாக்க வல்லது.

மனச் சுமைகளோடு (Anxiety, Depression, Stress) தங்களது பணிகளை செய்து வந்தவர்கள், சுமையை இறக்கி வைத்து விட்டு மன நிறைவாக தங்களது பணிகளை செய்யும் தகுதிக்கு வந்து விடுகிறார்கள்.

அந்த வகையில் ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞானத்தால் அகத்தில் விடுதலையோடும் புறத்தில் பல உயர்வுகளோடும் வாழ்ந்து வருபவர்கள் பலர்.

இது இன்னும் பல கோடி மக்களை சென்றடைய வேண்டும் என்பதே நமது நோக்கம்.

அந்த வகையில் அனைவருக்கும் சென்றடைவதற்காக நாம் ஞான முகாம்களையும் சத்சங்கங்களையும் நடத்தி வருகிறோம்.

சென்ற மாதம் மார்ச் 13-ஆம் தேதி ஞானியர் தினத்தில் திருநெல்வேலியில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான சத்சங்கம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இதில் பலரும் கலந்து கொண்டு பயனடைந்தனர். இதனை ஏற்பாடு செய்திருந்த திருநெல்வேலி அன்பர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் வருகின்ற ஏப்ரல் மாதம் 23, 24-ஆம் தேதிகளில் சென்னையில் 2 நாள் ஞான முகாம் நடைபெற உள்ளது.

இதனைத் தொடர்ந்து மே மாதம் 27-ஆம் தேதி முதல் 29-ஆம் வரை மூன்று நாட்களும் கேரளா-ஆனைக்கட்டியில் மூன்று நாள் ஞான முகாம் நடை பெறவுள்ளது. இதன் விபரங்கள் இம்மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் அனைவரும் கலந்து கொண்டு பயன் பெறுவதோடு தேடுதல் உள்ள நண்பர்களுக்கும் தெரிவித்து அவர்களையும் பயன் பெறச் செய்ய வேண்டுகிறோம்.






# ஜென் கதை

## "எது சரணாகதி ?"

சூஃபி மகான் ஒருவர் ஞானத்தை தேடி ஓர் ஞான குருவை சந்தித்தார்.

அக-விடுதலைக்கான வழியைக் கேட்டார்.

இறைவழிபாட்டின் உச்சமான சரணாகதி அடைவதே விடுதலைக்கு வழி என்றார்.

எனவே தன்னை முழுமையாக இறைவழிபாட்டில் ஈடுபடுத்திக் கொள்ள முடிவு செய்தார் சூஃபி மகான்.

எந்த வகையில் இறைவழிபாடு செய்தால் அது சரணாகதி அளவுக்கு உயர்வு பெறும் என்று யோசிக்கலானார்.

எனவே சூஃபி மகான் தனக்காக ஓர் அடிமையை விலைக்கு வாங்கினார்.

அன்றாட தேவைகளை அவன் கவனித்துக் கொண்டால் தாம் இறைவழிபாட்டில் மூழ்கி இருக்கலாமே என்ற எண்ணத்தால்.

அடிமையை வாங்கிக் கொண்டு அவர் வீட்டிற்கு வந்தார்.

அந்த அடிமையின் பணிவும் மாரியாதையும் அவருக்கு மிகவும் பிடித்து போயிற்று.

மெல்ல அவனிடம் பேச்சு கொடுத்தார்.

"உன்னுடைய பெயரென்ன?"

"நீங்கள் என்னை எந்தப் பெயரைக் கொண்டும் அழைக்கலாம். அது உங்கள் விருப்பத்தை பொறுத்தது" என்றான் அடிமை.

"நீ என்ன வேலை செய்வாய்?"

"தாங்கள் என்ன உத்தரவு அளிக்கின்றீரோ அதை செவ்வனே செய்து முடிப்பதே என்னுடைய கடமை" என்றான் அவன்.

"நீ என்ன சாப்பிடுவாய்?"

"தாங்கள் என்ன தருகின்றீரோ அதை சாப்பிடுவேன்" என்றான்.

"உனக்கு ஏதேனும் ஆசை இருக்கின்றதா?"

"எஜமானர் இருக்கும் போது அடிமைக்கு என்று ஒரு ஆசை தனியாக இருக்க முடியுமா? தங்களுடைய நாட்டமே என் விருப்பம்" என்றான் அடிமை.

அவனுடைய அந்த தன்னடக்கமான பேச்சைக் கேட்டதும் சூஃபி மகானுக்கு அழுகையே வந்து விட்டது.

தனக்கும் இறைவனுக்கும் இருக்க வேண்டிய தொடர்பை எந்த அளவுக்கு மேன்மையாக விளக்கி விட்டான் இந்த அடிமை.

"அன்பரே.. இறைவனிடம் நான் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை எனக்கு கற்றுகொடுத்து விட்டீர்கள்...

"இனி நீங்கள் அடிமை இல்லை. உங்களை நான் விடுதலை செய்து விட்டேன்." என்று கூறி அடிமையை அனுப்பி வைத்துவிட்டார் அந்தசூஃபி.



# நிகழ்ச்சி நிழல்கள்

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

## ஞானியர் தினத்தில் திருநெல்வேலியில் ஞான சத்சங்கத்தில்











பரம்பொருள் பவுன்டேஷன் மாகா விஷ்ணு நம்முடன்